இராமநாடகக் கீர்த்தனை

இயற்றிய

# அருணாசலக்கவிராயர் சரித்திரம்



PUBLISHED BY
LONGMANS, GREEN & Co
167, MOUNT ROAD, MADRAS.
BOMBAY AND CALCUTTA.

MADRAS:

1915.

# குசேலர்

தி. செல்வக்கேசவராய முதலியார்

Second Edition

RINTED AT THE S P ^ K. PRESS, VEPERY, MADRAS

1917



## இராமநாடகக் கீர்த்தனை
### இயற்றிய
# அருணாசலக் கவிராயர்
## சரித்திரம்.

சோழதேசத்தில் உள்ள தில்லையாடி என்ற திவ்ய க்ஷேத்திரத்தில், இற்றைக்குச் சுமார் நூற்றெழுபது வருஷங்களுக்கு முன் நல்லதம்பிப்பிள்ளை என்பார் ஒருவர் இருந்தனர். அவர் சைனமதத்திற் பிறந்து, பின் சைவசமயத்திற் புகுந்து நீறுபூசி வேளாளப் பூவைசியர் ஆயினர். அவருக்குக் கற்பொழுக்கம் நிறைந்த வள்ளியம்மை என்பார் மனைவியாக வாய்த்தனர். அவ்விருவரும் முற்பிறப்பிற் செய்த புண்ணிய முதிர்ச்சியால், இதிகாசங்களுள் ஒன்றாகிய இராமாயணத்தைக் கீர்த்தனையாகப் பாடித் தமிழுலகத்தைத் தமக்குக் கடமைப்படுத்திப் பெரும்புகழ்பெற்ற அருணாசலக் கவிராயர் என்பவர் அவர்களுக்கு அருந்தவச் செல்வக் குமாரராக வந்துதித்தார். இவருக்கு முன் பிறந்தார் மூவரிருந்தனர்.

நல்லதம்பிப்பிள்ளை, இவ்வருமருந்தன்ன குமாரரைப் பிறந்த ஐந்தாம் வருஷம், ஐந்தாவது மாதம், ஐந்தாநாளன்று தம் குலமுறைப்படி பள்ளிக்கனுப்பி வித்தியாரம்பஞ் செய்வித்தனர். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்ற பழமொழி பொய்யாத வண்ணம் இவர் பன்னிரண்டு வயதிற்

குள், மக்களெனப் பிறந்தார் ஒவ்வொருவர்க்கும் இன்றி யமையாது வேண்டப்படுவனவாகிய சாமானிய கல்விகளைக் கற்று முடித்தனர். ஆனால், அந்தோ, பாவம்! தம் புதல்வர் பேரும் புகழும் அடைவதைக் கண்டு களிக்கும் பாக்கியம இலராய்த் தந்தை தாய் இருவருள் தாய் முன்னும் தந்தை பின்னுமாக இவ்வுலக வாழ்வை நீத்துச் சென்றனர்.

ஆகவே, கவிராயா பாதுகாப்பு அவரது தமையன்மார் மூவரையும் பொறுத்ததாயிற்று. ஆயினும அவர் அத் தமையன்மாரது மேற்பார்வையில் இருந்கிலர். விதியின் வழி வேறாக இருந்தது. அவ்விதியால் உய்க்கப்பட்டு கவிரா யர் தம் கல்வியை அபிவிருத்தி செய்துகொள்ளுதற்பொரு ட்டு, தாம் பிறந்த இடத்திற் கருகாமையிலுள்ள தருமபுரம் என்னும் ஸ்தலத்தில் ஸதாபிக்கப்பெற்றுள்ள சைவமடத் திற்குச் சென்று, ஆண்டிருந்த சில தமபிரானகளிடம, வடு கும் கிரந்தமும் கற்றுவந்தார. தமது பதினெட்டாவது வயதிற்குள் அவா அவ் விருமொழிகளிலும் மிகுந்த தேர்ச்சி யடைந்தார. பிறகு அவர், கிரந்தத்திலும தமிழிலுமுள்ள சைவாகமங்கள் பலவற்றையும் கற்று வருவாராயினர். அன றியும் அவா அம்மடத்திலிருந்த அம்பலவாணக் கவிராய ரிடத்தில் தம் தமிழ்க் கல்வியை விருத்திசெய்து அதிற பூரண பாண்டித்தியமடைந்தார்.

அவரது அதிதீவிர பக்குவத்தையும், அறிவை வளர்ப்ப தில் அவர்க்குள்ள அடங்கா அவாவினையும் உணர்ந்து, அம் பலவாணக் கவிராயர் என்னும் அப்பண்டார சந்நிதி அவரை நோக்கி "நீர் இவ்வாதீனத்தின் தலைமையை வகிக்க ஒருப்படுவீரா?" என்று கேட்டனர். அதற்கு அருணாசலக் கவிராயர் "சுவாமி! தாங்கள் என்னை ஒரு பொருட்டாக

எண்ணி, இவ்வாறு கூறுங்கால் அடியேன் யாது செய்ய மாட்டுவேன்? ஸ்ரீராமாயணத்தில், தசரத சக்கரவர்த்தி முன்னம் இல்லறத்திலிருந்து பிறகே துறவறத்தை இச்சித்ததாகவும், அவரது திருக்குமாரராக வந்த ஸ்ரீராமபிரானும் சகல ஞானமும் உணர்ந்தும் இல்லறத்தையே கைக்கொண்டிருந்ததாகவும் கூறப்பட்டிருக்கிறது. அன்றியும் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் இயற்றிய தமிழ் வேதமாகிய திருக்குறளில் முன்னதாக இல்லறம் கூறிப் பிறகே துறவறம் கூறப்பெற்றிருப்பதாலும், அடியேனும் அவ்வான்றோர் சென்ற முறையிற் செல்ல விரும்புகிறேன்" என்று விடையளித்தனர். பண்டாரசந்நிதி இதைக் கேட்டு "ஆனால் உம் விருப்பப்படியே செய்யும்" என்று சொல்லி அவரை ஆசீர்வதித்தனர்.

ஆயினும் கவிராயர் அப்பொழுதே விவாகஞ் செய்து கொண்டு இல்லறத்திற் புகுந்தாரல்லர். 'விவாகம் வித்யாநாசம்' என்ற ஆன்றோர் வாக்கையும் அவர் அறிந்திருந்தார். ஆதலால், மேலும் சிலகாலம் தேனினும் இனிய தமிழ் மொழியைக் குறைபோகக் கற்றுத் தமிழ்ப் புலமையை நிரப்பிக்கொண்டார்.

பிறகு தமது முப்பதாவது வயதில் கவிராயர், கருப்பூரில் தம் இனத்தவரில் ஒரு புண்ணியவதியை விவாகஞ் செய்து கொண்டனர். இதுவரையில் பிரமசரியத்திலிருந்து கல்வி யீட்டல் ஒன்றிலேயே மனம் பற்றியிருந்த கவிராயர், இல்லறம் புகுந்தபின்னர், அவ்வறத்தைச் செவ்வையாய் நடத்துவதற்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகிய பொருளை யீட்டுங் கடப்பாடுடையராயினர். ஆகவே அக்கடப்பாட்டை முற்றுவிக்க வேண்டிக் காசுக்கடை ஒன்று வைத்து வர்த்தகம் செய்துவந்தனர்.

## அருணாசலக்கவிராயர் சரித்திரம்.

இறைவன் திருவிளையாடல்தான் இருந்தவாறு என்னே! என்னே!! கவிராயரது கல்வித்திறம் மழுங்காது, நாளேற நாளேறப் பிறை மதிபோல் ஒளிமிகுந்து ஒருகாலத்து நிறை மதியாகித் தென்னாடெங்கும் தண்டமிழ் நிலவுற்று இன்னொளிவீசி விளங்குதற்பொருட்டே போலும் அவர்க்குக் காசுக்கடை வர்த்தகத்தாற் பொருள் வருவாய் விதித்திருந்தது! இத்தொழிலிற் சாவகாசம மிகுதியும இருந்தமையால், அவர் அவகாசம் நேர்ந்தபோதெல்லாம், தமக்கு முன்னிருந்த தமிழ்ப்புலவர் இயற்றிய நூல்களை ஆராய்ந்து வந்தார். அன்றியும் தம் லௌகிகத் தொழிலில் பொன முதலிய உலோகங்களை உரையிட்டு மாற்று நிச்சயிப்பது போலத் தாம ஆராயும் நூல்களையும் தம மதி நுட்பத்தால் உரைதது இஃது இத்தனை மாற்று, இஃது இத்தனை மாற்று என்று நிச்சயித்து வந்தனா. அங்ஙனம் மாறறாராயுங்கால் மற்ற நூல்கள் யாவற்றினும், தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் இயற்றிய திருக்குறளும், கவிச்சக்கரவாத்தியாகிய கம்பர் இயற்றிய இராமாயணமுமே மாற்றுயர்ந்து விளங்கக் கண்டார். இவ்விரு நூல்களிலுமுள்ள சீரிய தீஞ்சொறகளும செவ்விய பொருள்களும் அவர் மனத்தைக் கவாந்தன.

ஆதலால், அவர் அவ்வரும்பெரும் நூல்கள் இரண்டையும் இடையறாது படித்து வந்தார். அப்பொழுது திருக்குறளுக்குச் சிறப்புப் பாயிரமாகச் சங்கப்புலவர் நாற்பத்தொன்மரும் பாடிய திருவள்ளுவமாலையில்,

எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதம்சீ ராம கதை மனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்

என்ற செய்யுளில் திருக்குறளுக்கு ஒப்பாகச் சொல்லப் பட்ட நூற்களுள் சீராமகதை அதாவது இராமாயணம் ஒன் றுதலை அவர் நோக்கி நோக்கிச் சிந்தித்து வந்தார். அதன் மேல் திருக்குறள் நீதிசாரமெனவும், இராமாயணம் அந் நீதிசாரம் இடையிடையே விரவி நிறைய அதனை ஒப்புயர் வற்ற ஒரு தலைவன்மீதும தலைவிமீதும ஏற்றி இயற்றப்பட்ட ஓர் இதிகாசம் எனவும் தெளிந்தார; திருக்குறள் இலக்கண மாகவும் அதற்கு இலக்கியம் இராமாயணமாகவும் அமைந் திருத்தலைக் கண்டார. அதனோடு தாம் முன்னமேயே செய்துவந்த நூல் உரைமாற்றுப் பரிட்சையில், திருக்குற ளும் கம்பராமாயணமுமே மாறறுயர்ந்தனவாகத் தெரிந் தெடுத்து வைத்திருப்பதை உன்னினா; பிறகு இவ்விரு நூலுள் எதனை உலகிற்கு எவ்வாறு பயன்படுத்தலாமென்று சிந்தித்தார் அப்போழ்து, திருக்குறள் நீதிசாரமாக நிற்ப தால், பாமரர்க்கு இனிமை பயவாது, பண்டிதர்க்கே பயன் பட்டு வருதலையும, இராமாயணம் நீதிசாரத்தோடு ஒரு புண்ணிய சரிதத்தையும கூறி நிற்பதால் பண்டிதர்க்கும் பயன் பட்டுப் பாமரர் மனத்தையுங் கவர்ந்து வருதலையும் உணர்ந் தார். இக் காரணங்களோடு அவர்க்கு இயற்கையாகவே இராமசரிதத்தில் உள்ளம பறறியிருந்ததென்பது, அவர் தாம் தருமபுர மடத்தலைமை வகிக்க விரும்பாது இல்லறம் புகுதறகு ஓர் ஆதாரமாகத் தசரதர், இராமர் இவர்களுடைய சரித்திரத்தை உதாரணமாக எடுத்துக்காட்டியதாலும் பெறப் படும். இங்ஙனம் பலகாரணங்களாலும் அவர் இராமாய ணத்தை உலகிற் பிரபலப்படுத்த வேண்டுமென்ற ஒரு முடி வுக்கு வந்தார். ஆதலால் அவர் இராமாயணத்தையே அதிக மாகப் பயின்றும், பயில்வார்க்குப் போதித்தும், பண்டிதர் பாமரர் நிறைந்த சபைகளிற் பிரசங்கித்தும் வந்தனர்.

இவ்வாறு நிகழ்ந்து வருகையில் கவிராயர் தம் வர்த்தகத்திற்காகப் பொன், வெள்ளி முதலியன கொள்ளவேண்டிப் புதுவைமாநகர்க்குப் புறப்பட்டுச் சென்றனர். ஏனெனில் அக்காலத்தில் புதுவையில் பொன் வெள்ளி முதலியன நயவிலைக்குக் கிடைத்தன. சீர்காழி வழியாகவே புதுவைக்குப் போகவேண்டியிருந்தமையின் அவர் சீர்காழி சென்றதும், அங்கு மடத்தில் தங்கினர். அம்மடம் தருமபுர மடத்தைச் சார்ந்ததாய் இருந்தது. அந்த மடத்திற்கு அப்பொழுது கட்டளைத் தம்பிரானாக இருந்தவர் சிதம்பரம்பிள்ளை என்ற ஒரு கார்காத்த வேளாளர். இவர் தருமபுர மடத்தில், கவிராயரோடு ஒருங்குகற்றவர். இல்லறம்பூண்டிருந்த இவர் பண்டார சந்நிதியின் ஏவலால் துறவுபூண்டு சீர்காழிமடத்திற்குக் கட்டளைத் தம்பிரானாக வந்திருந்தார்.

சிதம்பரம்பிள்ளையும், அருணாசலக்கவிராயரும், ஒருவரையொருவர் விட்டுப் பிரிந்து நெடுநாளாயினமையின், இப்பொழுது தற்செயலாய் சந்திக்கவும் உவகை மேலிட்டு ஒருவர்க்கொருவர் க்ஷேமலாபங்களை விசாரித்தனர். பிறகு சிதம்பரம்பிள்ளை தாம் அம்மடத்துக்கு வந்தபிறகு கட்டளை வருவாய் முன்னையினும் அதிகமாயினதெனவும், அதன்மேல் தாம் கட்டளைமாலை என்று ஒரு சிறு நூல் பாடியிருப்பதாகவுங் கூறி அந்நூலை, அருணாசலக் கவிராயர்க்குக் காட்டினர். அவர் அதனைப் படித்துப் பார்த்துவிட்டுத் தமது நல்லபிப்பிராயத்தினைத் தெரிவித்து ஒப்பமிட்டார். பிறகு சிதம்பரம்பிள்ளை, கவிராயரிடம் தாம் சீர்காழித்தலத்திற்கு ஒரு *பள் பாடுவதற்காகப் பீடிகை போட்டதாகவும், ஆனால் பலவகை

* பள் என்பது, உலா, மடல், பரணி என்பனபோல ஒருவகைப் பிரபந்தம்.

அலுவல்களால், அதை நிறைவேற்றத் தமக்கு அவகாச கிடைக்கவில்லையெனவும் தெரிவித்து, அதை இருந்து மு த்துக கொடுத்துவிட்டுப் போகவேண்டுமெனவும கவிர யரை வேண்டித, தமது பீடிகையையும் அவரிடம கொடுத் ன.

அருணாசலக் கவிராயர், அன்றிரவிலேயே அநதப் பி பந்ததைப் பாடி முடிததுவிட்டு, மறுநாள் அதிகாலையி எழுந்து கட்டளைத்தமபிரான அடியார்களுள் ஒருவன வச அதைக் கொடுதது அதைத் தமபிரானிடம சேர்த்துவிடு தோடு, தாம அவசர காரியமாய்ப புதுவை செல்லவேண் யிருக்கிறதாகவும, ஆதலின் அங்குச சென்று திரும்பி வரு கால் மடத்தில் தஙகுவதாகவும, தமபிரானுக்குத் தெரிவி கும்படி சொல்லிவிட்டுப் புதுவைக்குப் புறப்பட்டுப் போய விட்டனர்.

தமபிரான, பொழுது விடிந்ததும தம நண்பர் முடித் திருநத பள்ளுப் பிரபநதத்தைக் கண்டும, அவா புதுவைக் குச் சென்று விடட செய்தியைக் கேடடும மிகவும் ஆச்சரிய முற்றா. கவிராயர் திருமபிவநதபிறகு அவரைச் சீர்காழியிற் றானே தங்கசசெய்யவேண்டும என்ற விருப்பம தம்பிரான் மனத்தில் தோன்றியது. உடனே தம்பிரான் தம் நண்பருக் கென்று பெரிய வீடொன்று சித்தம செய்து, தில்லையாடி க்கு ஆள் அனுப்பி அவர் குடுமபத்தாரை, அவரே அழைப் பதாகச் சொல்லிச் சீர்காழிக்கு அழைப்பித்து அவ்வீட்டில் அவர்களைக் கிரகப்பிரவேசம் செய்வித்தனர்.

புதுவைக்குச் சென்ற கவிராயரோ, தம் காரியத்தைச் சில நாட்களில் முடித்துக்கொண்டு திரும்பி வருங்கால், முன் அடியானிடம் கூறிச் சென்றபடி சீர்காழி மடத்தில் வந்து

தங்கினர். சிதம்பரத்தம்பிரான் தம நண்பரைக் காணவும், தம்மிடம் சொல்லிக்கொள்ளாமல் அவா புதுவைக்குப் போனதைப்பற்றிச் சிறிது சலித்துக்கொண்டு பின் உலாவப் போகிறவர்போல் அவரையும உடன் அழைத்துக்கொண்டு அவர் குடும்பத்தார் உறையும் புதுமனைக்குச் சென்றார். தம்பிரானேடு, கவிராயர் அம்மனைக்குள் நுழைந்தபோது, தம்மனைவி தமமை எதிர்கொண்டு வரக் கண்டார்! அவர் கொண்ட ஆச்சரியத்திறகு ஓர் அளவில்லை. பிறகு அவர் தமது மனைவி மூலமாகவே தாம் புதுவைக்குச் சென்ற பிறகு நடந்தவை அனைத்தையும அறிந்துகொண்டார். இனி என்றும் தம் குடும்பத்தோடு சீர்காழியிற்றானே, வசித்து வரும்படி தம்பிரான் அவரை வேண்டிக்கொண்டார். அவரும் அவ்வேண்டுகோளுக்கு இணங்கி அனறுமுதல் சீர்காழியிலேயே வசித்து வநதா. அது முதலே அவர்க்குச் சீர்காழி அருணசலக் கவிராயர் என்ற திருநாமம் வழங்கி வருவதாயிற்று.

கவிராயா சீர்காழியில வசிக்கையில் தம்பிரானுக்குப் பாடிக்கொடுத்த தனிக்கவிகள் அநேகம. அவைகளை யல்லாமல், தமக்காகவே பாடிய நூல்கள் பல. அவையாவன, அசோமுகி நாடகம், சீர்காழி ஸ்தல புராணம், சீர்காழிக் கோவை, அனுமார் பிள்ளைத்தமிழ் முதலியனவாம்.

சீர்காழிக்கடுத்த சட்டநாதபுரம் என்னும் கிராமத்தில், அக்காலத்தே, வேங்கடராமய்யர், கோதண்டராமய்யர் என்று இரண்டு பிராமணாகள் இருந்தார்கள். அவர்கள் சங்கீத சாஸ்திரத்தில் மிகவும் தோச்சி பெற்றிருந்தனர். அவ்விருவரும் நமது கவிராயரை அடுதது அவரிடத்தில் முன்னதாகச் சில சிறு நூல்களைக் கற்றுப் பிறகு கம்பர் அரு

ிச்செய்த இராமகதையைப் பாடங்கேட்டு வந்தனர். அப்பொழுது, ஒருநாள் அவர்கள் தம் தமிழாசிரியரை நோக்கி, "ஐய, தாங்கள் இதுகாறும் வெளிப்படுத்தியுள்ள புராணம், கோவை முதலிய நூல்களால் தங்கள் பெயர் எங்கும் பரவவில்லை. ஆதலால் தாங்கள் இதிகாசம் இரண்டனுள் ஒன்றைத் தெரிந்தெடுத்து அதை ஒருவகைப் பிரபந்தமாகச் செய்து முடித்தால் நல்லது" என்று கூறினார்கள்.

அதன்மேல், அருணாசலக் கவிராயரும் "இவர்கள் சொல்வது உண்மையே. நாமும் முன்னமேயே சகல நூல்களினும இராமாயணமே சிறநததென்றும ஆதலால் அதையே ஒரு பிரபந்தமாகச் செய்து முடிப்போம் என்று தீர்மானித்திருக்கிறோம. அதை விரைவிற் செய்து முடிப்போம்" என்ற முடிவுக்கு வநதாா. இனித் தீர்மானிக்கவேண்டியது, தாம தெரிந்தெடுத்த அவ்விராமாயணத்தை எவ்வகைப் பாவால் எவ்வகைப் பிரபந்தமாகச் செய்வதென்பதே. கம்பர் முன்னமே இராமாயணத்தை விருத்தப் பாவாற் பாடி முடித்திருந்தாா. அவரையன்றிப் பாலபாரதியார் எனபாா ஒருவா அதனைச் சந்த விருத்தமாக இயற்றியிருந்தனர். மற்றும பலா பலவாறாகச செய்திருந்தனர். அவைகளின் வேறாக வேறெவ்வகையில் தாம தெரிந்தெடுத்த நூலை இயற்றலாமென்று கவிராயா சிந்தித்தார். அப்பொழுது கீர்த்தனையாக இயற்றினால் நலமென்று அவர்க்குத் தோற்றியது. அதற்கு அநேக காரணங்கள் அனுகூலமாய் இருந்தன. முதலாவது, அதுவரையில் இராமாயணத்தைக் கீர்த்தனை ரூபமாகச் செய்தவா ஒருவருமிலர். இரண்டாவது, தாம் இயற்றும் கீர்த்தனைகளுக்கு இராகதாளங்களை நிச்சயிப்பதற்குத் தம்மிடம் இயற்றமிழ் கற்று

வரும், இரு சங்கீத விற்பன்னர்களும் வேண்டிய உதவிபுரி வார்கள். மூன்றாவதும் முன்னைய இரண்டினும் அதி முக்கியமானதொரு காரணமும் என்னவெனில், பண்டிதர் க்கே பெரிதும் பயன்படக்கூடிய கம்பராமாயணம் போலல் லாமல், கீர்த்தனை பெண்களும் பேதையரும் கூடப் படித் தானந்திக்கத்தக்கது. இக் காரணங்களால கவிராயர் இரா மாயணத்தைக் கீர்த்தனையாகப் பாடத் தொடங்கினர். முதன்முதல் அவர், யுத்தகாண்டத்தில் 'அடடா வெளியே புறப்பட்டா' என்ற கீர்த்தனைவரையுமே பாடித் தம் பிரா மணசீஷர்கள் இருவரிடத்தும கொடுத்தனர். அவர்கள் அக் கீர்த்தனைகளுக்கு இராகதாளங்கள் அமைத்துக் கொடுத்தது மன்றி, சென்னைக்குச் சென்று அவைகளைப் பாடிப் பரிசு பெற்றார்கள்.

சிலகாலத்திற்குள் கவிராயா கீர்த்தனைகள் தமிழ் நாடெங்கும் பிரபலப்படுவதாயின. அதனால் ஊக்கமுறுத் தப்பெற்றும் தமது பிராமண சீஷர்களால் மேலும் தூண் டப்பெற்றும் கவிராயா இராமாயணத்தின எஞ்சிய பாகத் தையும் கீர்த்தனைகளாக்கி, யாவற்றையும சேர்த்து ஒரு கோவைப்படுத்தி என்று மழியாப் பெருமைவாய்ந்த இராம நாடகக் கீர்த்தனை என்னும் நூலை உலகிற் களித்து அழியாப் புகழ்க்கு உரியராயினா. இத்தகைய பெரும் புகழ்க்குச் சாதனமாக அக்கீர்த்தனைகளுள் காணப்படும் நலங்கள் பல் வற்றில் சிறந்தவை இரண்டு. அவையாவன, அவைகள் எல்லோரும் எளிதிலறிந்து ஆனந்திக்கத்தக்க இனிய எளிய நடையில் வாய்ந்திருப்பதும், கவிச்சக்கரவர்த்தியா கிய கம்பர் இயற்றிய இராமாயணத்தையே பெரிதும் பின் பற்றி அவர் பதப்பிரயோகங்களையே பெரும்பாலும் கொ ண்டு இயன்றிருப்பதுமே.

நூலை முடித்தபிறகு கவிராயர் அதை அரங்கேற்ற விருமபினார். முன்னம் கம்பர் தாம் பாடிய இராமாயணத்தைச் சீரங்கம் என்னும் ஸ்தலத்தில் அரங்கேற்றினா ராதலால் தாமும் தமது நூலை அங்கு அரங்கேற்ற எண்ணி அங்குச் சென்றார்.

அப்பொழுது சீரங்கநாயகர் திருக்கோவிற்றுறையார்கள் கவிராயரை நோக்கி, "ஐயா, பூர்வம கம்பநாட்டாழ்வார், இராமயாணததைப் பாடி, அதை பூர்வாசாரியராகிய ஸ்ரீமந நாதமுனிகள் திருமுனனர் பிராட்டியாா சந்நிதானத்தில பெருமாள் எழுநதருளியிருக்க அரங்கேற்றினார். அக்காலத்தில் பல தருணங்களில் பல அறபுதங்களை அவர் உலகத்துக்குக் காண்பித்தாா. அவா பாடிய நூலையே நீர் கீாத்தனையாகப் பாடியிருக்கிறீா. ஆதலால பெருமாள் எங்களுக்கு உததரவு கொடுத்தால நாங்கள் இதை இஙகு அரங்கேறறச் சமமதிப்போம" எனறாாகள.

அதன்மேல் கவிராயா ஏகாநதமாக ஓர் இடத்திலிருந்து ஒரு கீாத்தனையால சீரஙகநாயகரை ஸ்தோததரிததார். அக்கீாத்தனை வருமாறு:—

தரு. மோகன ராகம. ஆதி தாளம

பல்லவி.

ஏன்பள்ளிகொண்டீர் அயயா-ஸ்ரீரஙகநாதரேநீர்
ஏன்பள்ளிகொண்டீா அயயா

அநுபல்லவி

ஆம்பல்பூத்தசையப் பருவதமடுவிலே
அவதரித்த இரண்டாற்று நடுவிலே. (ஏன்)

சரணங்கள்.

1. கோசிகன்சொல்குறித்ததற்கோ-அரக்கி குலையில்அம்பு தெறித்ததற்கோ
ஈசன்வில்லைமுறித்ததற்கோ-பரசு ராமன்உரம்பறித்ததற்கோ
மாசிலாதமிதிலேசன்பெண்ணுடன் வழிநடந்தஇளைப்போ
தூசிலாதகுகன்ஓடத்திலேகங்கைத் துறைகடந்தஇளைப்போ
மீசுரமலும்சித்ரகூடச்சிகரக்கல் மிசைநடந்தஇளைப்போ
காசினிமேல்மாரீசன்ஓடிய கதிதொடர்ந்தஇளைப்போ-ஓடிக்
களைத்தோ தேவியைத்தேடி இளைத்தோ மரங்கள்ஏழும்
தொளைத்தோ கடலைக்கட்டி வளைத்தோ இலங்கையென்னும்
காவலமாநகரை இடித்தவருத்தமோ
ராவணாதிகளை அடித்தவருத்தமோ (என்)

2. மதுரையிலேவரும்களையோ முதலைவாய் மகனைத்தரும்களையோ
எதிர்எருதைப்பொருங்களையோகன்றைஎடுத்தெறிந்தபெருங்களையோ
புதுமைஆனமுலை உண்டுபேயின்உயிர் போக்கிஅலுத்தீரோ
அதிரவோடிவரும்குருவிவாயையிரண் டாக்கிஅலுத்தீரோ
துதிசெய் ஆயர்களைக காக்கவேண்டியலை தூக்கி அலுத்தீரோ
சதிசெய்காலிங்கன்மணிமுடி தாக்கிஅலுத்தீரோ-மருதம்
சாய்த்தோ ஆடுமாடுகள் மேய்த்தோ சகடுருளை
தேய்த்தோ கஞ்சன்உயிரை மாய்த்தோ அர்ச்சுனனுக்காச
சாரதியாய்த்தேர் விடுத்தவருத்தமோ
போரிலேசக்கரம் எடுத்தவருத்தமோ (என்)

3. படிதனிலேமெத்தவும்நானே உம்மைப்பரம்எனவேஅடுத்தேனே
அடிமைகொள்வீர்என்னைத்தானே செம்பொன் அணிஅரங்கப்பெருமானே
தடம்உறைந்தகரும்பாறைசாபமது தடுத்துரட்சித்தீரே
விடஒண்ணாதகாகாசுரனுக்கொருகண் விடுத்துரட்சித்தீரே
கொடுமைகொண்டழுததுரோபதைக்குத்-துகில்கொடுத்துரட்சித்தீரே
மடுவில்ஆனைமுன்ஓடிமுதலையை மடித்துரட்சித்தீரே-அதுபோலே
வாரும் கிருபைக்கண்ணாலே பாரும் மனக்கவலை
தீரும் வினைத்தவரம் தாரும்தாரும்என்சாமி
லட்சமேவும்மக லட்சுமியுடன்பெரும்
பட்சம்ஆகஎன்னை ரட்சிக்கஎழுந்திரும் (என்)

இந்தக் கீர்த்தனையால் பெருமாள் திருவுள்ளம் உவந்து, கவிராயர் சொப்பனத்தில் ஒரு வைஷ்ணவரைப்போல வந்து "ராம நாடகம இயற்றிய இனறமிழ்ப் புலவரே, பூர்வம் கம்பர் தாம் பாடிய இராமாயணத்தை அரங்கேற்ற வந்தபொழுது 'நம் சடகோபனைப் பாடினையோ?' என்று பெருமாள் கேட்டார். அப்பால் அவர் நடமாழ்வார்மீது ஒரு நல்லந்தாதி பாடினர். பிறகே அவர் இயறறிய இராமாயணம் அரங்கேறியது. அவ்வாறே நீரும உமது நாடகத்தில் நம்பெருமாளின் பரிசனங்களைப் பாடினால் உமது நூல் அரங்கேறும்" என்று கூறி மறைந்தருளினார். பிறகு அன்றிரவே கோவிற்றுறையாருக்கும் பெருமாள் வைஷ்ணவர் வடிவாகச் சொப்பனததில தோனறிக்"கவிராயரால் நம் பரிசனங்களைப் பாடுவித்துக்கொண்டு அவர் இயற்றியுள்ள இராமநாடகத்தை அரங்கேறறச செய்யும்" என்று கூறி மறைந்தருளினார்.

மறுநாள் பொழுது விடிந்தபிறகு கவிராயரும் கோவிற்றுறையாரும் சநதித்துத் தாம்தாம் கண்ட சொப்பனங்களைக் கூற, ஒன்றுக்கொன்று பொருத்தமுற் றிருப்பதுணர்ந்து "இறைவன் திருவுள்ளம் இதுவாகும்" என்று அறிந்துகொண்டார்கள்.

பிறகு கவிராயர் தம் நாடகத்திற்குத் 'தோடயம்' பாடி, அதில் பெருமாளின் பரிசனங்களாகிய அனந்தகருட விஷ்வக்ஸேனர், பஞ்சாயுதங்கள், ஆழ்வார், ஆசாரியர்கள் ஆகிய அனைவரையும் அமைத்தார். *

---

தோடயத்தில அமைததுள்ள விநாயகர், சீரங்கநாயகர் கோவிற் பரிவார தேவதைகளுள் ஒருவர். பாயிரத்துள் கூறியுள்ள விநாயகர், சேனைமுதலியார் பரிவாரத்துள் ஒருவர்.

அப்பால் அவர் நூல், கவிச்சக்கரவர்த்தியாகி கம்பர் இயற்றிய இராமயாணம் அரங்கேற்றப்பட்ட திரு மண்டபத்திலேயே, பங்குனி அஸ்தமாகிய அதே திரு நட்சத்திரத்தில் திருவரங்கத் திருமுற்றத்து அடியார்சபை நடுவே முதன் முதல் அரங்கேற்றப் பெற்றது. அக்கால அக்கோவிலார் கவிராயர்க்குச் செய்த மரியாதைகளும் சிறக்கத் தந்த பரிசுகளும் பல.

பிறகு கவிராயர் தஞ்சாவூர் சமஸ்தானாதிபதி ஆகிய துளசி மகாராஜாமுன் தமது நாடகத்தை அரங்கேற்றச் சென்றார்: அச்சமயம் தஞ்சைக்கோட்டை சென்னை நக நவாப்பாயிருந்த மதார் மல்க்கின் தானையால் முற்றுகை யிடப்பெற்றிருந்தது. ஆதலால் கவிராயர்க்கு அரசரைக் காண ஏது வில்லாதுபோயிற்று. ஆகவே கவிராயர் புதுவை நகரத்திலிருந்த ஆனந்தரங்கப்பிள்ளை யென்னும் ஒரு பிரபல பிரபுவின் முன்னிலையில் தமது நூலை அரங்கேற்றக் கருதி அவரிடம் சென்றார்.

ஆனந்த ரங்கப்பிள்ளை, துளசி மகாராஜர்க்கு அத்தியந்த நண்பர். ஆதலால் தமது நண்பர் கேட்பதற்குமுன் தாம் கேட்பது தகாதென்று மறுத்துவிட்டார். ஆயினும் அவர் கவிராயர்க்குப் பலவகையான வெகுமதிகள் செய்து, சென்னையிலிருந்த தமது நண்பர், மணலி-முத்துகிருஷ்ண முதலியாருக்கு ஒரு தகவுரைப் பத்திரிகை (சிபார்சுக்கடிதம்) எழுதிக்கொடுத்து அவரிடம் அனுப்பினார்.

கவிராயர் அக்கடிதத்தை எடுத்துக்கொண்டு சென்னைக்குச் சென்றார். சென்னையை அடைந்ததும், மணலி-முத்து கிருஷ்ண முதலியாருக்கு ஆனந்த ரங்கப்பிள்ளையின் கடி

ரத்தை அனுப்பினர். அதனோடு பின்வரும் சீட்டுக்கவியை
யும் எழுதி யனுப்பினர் :—

த்திதரு திறவல்லி பத்திதரு திறவல்லி தேவர்கள் வணங்கும்வல்லி
தில்லைநா யகவல்லி சிவகாம வல்லிஇரு திருவிழிக் கருணையாலே
த்தியவா சகன்என்று பூமண்ட லாதிபர்கள் தாம்எங்கணும் துதிக்கும்
சகலபா ஷாவிபுண மணலிமுத் துகிருஷ்ண சதுரநீ வாழிகண்டாய்
த்துமலர் குவளைநான் மதியம்நீ செஞ்சாலி நான்கருவி மழைமேகம்நீ
கவினம்நான் பரிதிநீ பிள்ளைநான் அன்னைநீநான்கவிஞன்வழுதிநீகாண்
த்தமுள ராமாய ணந்தனைக் கொண்டுனது சுகமுமது பெறவருகின்றேன்
சொற்பொருள் அறிந்தளவு சொல்லுவேன கேட்கவே துணைஆக வேணும்நீயே.

இதை, முதலியார் அங்கீகரித்துக், கவிராயரைத் தம்
மிடத்துக்கு அழைப்பித்துத் தக்க மரியாதை செய்தார். கவி
ராயர், "ஐய, அடியேன் ஸ்ரீ ராமசரிதத்தைக் கம்பர் இயற்
றிய இராமாயணத்துக் கிணங்கக் கீர்த்தனைரூபமாக இயற்றி
யிருக்கின்றேன். அதைத் தங்கள் சமுகத்தில் கூற விரும்பு
கிறேன்" என்றார். அப்போது முதலியார், கவிராயரை
நோக்கி, "ஐயா, சிலகாலத்துக்கு முன் இருவர் பிரா
மணர்கள் இராமநாடகம் ஒனறைக் கொண்டுவந்து இங்கே
பாடினார்கள், அதுதானோ இது ?" என்று கேட்டார். கவி
ராயர் அதுவும் நான் பாடியதுதான்; ஆனால் அது இராமா
யணத்தின் ஒருபாக சங்கிரகம். அதையே இப்பொழுது
விரித்து முடிவுவரையிற் பாடியிருக்கிறேன்," என்றார்.

அதன்மேல் முதலியார் "அப்படியானால் தாங்கள்
அதைப் பிரசங்கிக்கலாம்," என்றார். கவிராயர், அந்தப்
படியே பலர் கூடிய சபையில் தமது இராமநாடகக் கீர்த்
தனையை விரித்துப் பிரசங்கித்தார். ஸ்ரீராமர் பட்டாபிஷே
கம் பிரசங்கம்செய்து முடிவுபெற்றபோது, முத்துகிருஷ்ண

முதலியார் அவருக்குப் பலவகையான பரிசுகள் கொடுத்து மரியாதை செய்தார். அதன் சிறப்பு, கவிராயர் பாடிய பின்வரும் செய்யுளால் விளங்கும்.

கனம்தந்தான் கனகாபி ஷேகந் தந்தான்
களங்கமில்லாக் கருப்பொருளை அழைத்துத் தந்தான்
மனம்தந்தான் முடிசூட்டு மாலை தந்தான்
வாணிசிங்கா தனத்திருத்தி வரிசை தந்தான்
இனம்தந்தான் ராமகதை எவர்க்கும் தந்தான்
எனைராமா யணக்கவிஞன் எனப்பேர் தந்தான்
அனம்தந்தான் மணலிமுத்து கிருஷ்ண பூபன்
அகம்தந்தான் இருமையிலும் சுகந்தந் தானே.

இவ்வாறு மணலி முத்துகிருஷ்ண முதலியாரால் சன்மானிக்கப்பெற்ற கவிராயர், அப்பால் லிங்கப்பச் சேட்டியார் என்பாருடைய குமாரர் தேப்பெருமாள் செட்டியாருக்கும் பின்வரும் சீட்டுக்கவி யொன்றை எழுதியனுப்பினர்.

கணிகொண்ட பஞ்சலட் சணமும் ராமாயணக்
கடலையும் உணர்ந்த புலவன்
கவிராசர் புகழ்கின்ற காழி அருணாசலக்
கவிராயன் எழுதும் ஓலை
மணிகொண்ட மார்பிலிங் கப்பமகி பாலன்
மகிழ்ந்த சுதன் வணிகாதிபன்
வருஞ்சீர் படைத்ததேப் பெருமாள்ம கீபன்இதை
மனமுவந் தினிது காண்க
அணிகொண்ட தியாகேசர் வண்ணமுறை செய்ததும்
அதற்கு வெகுமதி செய்ததும்
அதுசமக் குபகார மானதும் இப்புவியில்
அறியாத பேரு முளரோ

பணிகொண்ட ராமகீர்த் தனையும்அப் படியே
பரிந்துநீ கேட்க வேணும்
பாரில்ஓ ராயிரம் பிறைகண்டு நீபொருள்
படைத்து வாழ்ந்திடுக மாதோ.

இக் கவிதையைக் கண்ட செட்டியார் கவிராயர்க்குத் தக்க பரிசளித்து மரியாதை செய்தார். இது நிற்க.

மதார்மல்க் நவாப்பும் துளசிமகாராஜாவும் ஒருவர்க்கொருவர் சமாதானப்பட்டார்கள். ஆதலால் கவிராயர் துளசி மகாராஜரையும், அப்பால் ஒரு பஞ்சரத்தினம் மூலமாய் ஆனந்த ரங்கப்பிள்ளையையும், பின்பு உடையார் பாளையத் துரையாகிய உவரங்கப்புடையாரையும், வேறு சில பாளையப்பட்டுத் துரைகளையும் கண்டு, தமது நூலை அவர்கள் முன்னிலையில் பிரசங்கித்து அவர்களால் பல கௌரவப் பரிசுகள் பெற்றார்.

இங்ஙனம் இவர், தாம் ஈட்டிய பொருளைக்கொண்டு சீர்காழியில்தானே இருந்து குடும்ப சம்ரக்ஷணை செய்து வந்து விகாரி௵ ஆனிமீ இறைவன் திருவடி சேர்ந்தார்.

கவிராயர், தலையில் தாழ்வடம், இடையில் வெள்ளாடை, மேனியில் திருநீற்றுப்பூச்சு முதலிய சிவசின்னங்கள் பூண்டு, சைவப்பண்டாரக் கோலத்தோடு விளங்கினர். இவர் தமது விவாகத்துக்குப்பின் பன்னிரண்டு வருஷம் தில்லையாடியில் வசித்து, அப்பால் சீர்காழியில் இருபத்தைந்து வருஷம் வசித்தனர். உயிர் துறக்குங்கால் இவர்க்கு வயது 67. இவர் தமது 60-ஆவது வயதில் இராமநாடகக் கீர்த்தனையைப் பாடி முடித்தனர்.

இவரது சரித்திரக் குறிப்புகள் பல இவர் சந்ததியாரால் உலகிற் களிக்கப்பெற்றன.

அருணாசலக்கவிராயர்

பாடிய

# இராமாயண ஓரடிக் கீர்த்தனை

விருத்தம்.

ஏர்கொண்ட நான்மறையின் பொருளை யெல்லாம்
இனியதமி ழாகச்செய்து தொண்டர்க் கீந்த
பார்கொண்ட குருகூர்வாழ் சடகோ பாழ்வார்
பதமலரைப் பணிந்துதிருச் சென்னை மேவும்
தார்கொண்ட புயாசலன ஒப்பில்லா
சதுரன அயனறொழும ராமசந்தி ரமா
சீர்கொண்ட திருவருளின பெருமை
தேறுவேன மனமகிழ்ந்து கூறு

ராகம்—[illegible]

[illegible]

[illegible]

கோகனக மலர் மருவே.

அநுபல்லவி

**தாதண்டமலர்ச்சோலை - விண்கற்பகத்தின் மேலே**
**தழைக்குஞ்சென்னைநகர்வாழ் - ஸ்ரீவேங்கடேச மாலே.**

பூதகிமுலைஉண்ணல்போல் - ஆவிஉண்டொரு காலே
போற்றுமயாதவாக்கின்பங் - தேக்கசெயதாய்பரி வாலே
புத்தமுதத்தினை நற்சுராருககுமுன
உற்றிடமிக்க அளிததிடுசறகுண
பூஜிதம்பெறு ராமசந்திர
னேசவுநதர ரூபரஞசித
புகழுலாமகள்தழு விய அதிபுஜபல
மிகுபரிமளமுறு துளவணிரவிகுல
புண்யநீடிமஅணட பகிரணடஙகளைஉணட
திணயனே அகணட புகழ்கொணடபிரசண்ட (கோதண்ட

ஜெவுநகது

தரணிமனனா மனனவன அதிபுஜபல (தசரதன்)
தகைமைவாய்ப்பஉயா மனுநெறிமுறைகொடு
தருமபோததிநகா அரசுசெயரவிதல (தசரதன்)
சாப்பராஜசய னததினமீதுதுயில்
உற்றுவிறுபர வஸதுவானதொரு
தசமுகனல்இடாப் படுமஉயா அமராகள்
நசையுடனேதுதி கரநரஉருவொடு (தசரதன்)
தார்பு[illegible]
மாமகவானுமஅவன பாலனுநதேயுவுஞ்
சீர அனுமான சுக்ரீவனற்சாமபவன்
வாலிஅங்கதனீல னய்வரவானவா
வானரங்களாயமண்ணினில் வந்திடசசெய்துமட்டி
தானவர்குலத்தைவிண்ணிற் சேர்ததிடக்கங்கணங்கட்டி
சங்குசக்கரமு மங்களத்தினில்மி
குந்தஅற்புத அனந்தநற்லனும்

வ

சம்ப்ரமத்தில்இல குஞ்
தன்னிடம்லட்சுமணன் சத்துருக்கனும்கைகேசி
மின்வயிற்றிற்பரதனும் தம்பியராய்ச்சனிக்கத்
தான்எண்ணிக்கோசலை வயிற்றிற்சித்திரைமாதம்
ஆனநவமிபுனர் பூசநக்ஷத்திரநாளில் (தசரதன்)
சந்தரவிம்பமுக முங்கிருபைவளர்தரு
கின்றகண்களும் நெடுஞ்சிலையெனுநுத
லுஞ்சிறந்தபவளந் தனைநிகரத
ரந்தகுந்தஒளிர் குண்டலம்அணிசெவி
களுநிலவெறிகமு கிணைநிகர்களமொடு
விரைகமழ்துளவணி புயமலைகளும்அலர்
கமலமலர் அனைய கரமலர்களும்நெடு
உலகம்அதனைஉணும் அழகியவயிறொடு
தாரணிமார்புமவண் டாமரைத்தாள்களும்
சாமளமேனியும் ராமனென நாமமும்
தயங்க அருமறை உணர்புங்கவர்மிகு
ஜெயம்விஜயபவ எனுமங்களமொடு (தசரதன்)
தசரதன்சுதனு வுதித்து தனுவிற்கதித்து
தாடகைப்பாவியை வதைத்து
விசுவாமித்திரனுடன் மிதிலைக்குச்செல்லும்போது
வேதச்சிரத்தில்நடம் ஆடும்சீர்பாதப்போது
இசைவுறப்பட்டளவில் அகலிகையென்னுமாது
எழுந்தாள்கல்லுருமாறி இதுவல்லாமல்மண்மீது.
இந்த்ரபோகசன கன்வில்லைரண்டு
துண்டமாகஒடித் தான்அதைக்கண்டு
சுந்தரிசீதையைத் தந்தனனேமகிழ்
கொண்டிடவேமண மானபின்னேவரு

இன்றவழியதனிற் பாசுராமன்வில்மு
றிந்திடவேசெய்து சனகியோடயோத்தி
வந்துகூனிகல கந்தனுல்அரசி
ழந்துநீடுபுகழ் தம்பியோடுமலர்
மங்கைசீதைபதம நொந்துவாடிவர
கங்கைமாநதி கடந்துவாசமலாக்
காவிரிதருசித்ர கூடபர்வதத்தில்
மேவிப்பரதனுக்குப் பாதுகைஅளித்தபின்
விரிதண்டகவன வருகொண்டதிலேலத்
திரிஎன்றிடுதவ முனிவன்கிர்பைபெற்
றிட்டபின்புவிராதன இருகைஅது
முட்டவிண்டிடவேசெய்துசரபங்க
முனிவன்ஆசிர மந்தனிலேஎழிற்
சனகியோடெயதி இந்திரனபோனபின்
தண்டகாரண்ய வாசிகளபடிதுயா
கண்டேனோர்இடா தீர்தாஇணையறு
கருணைகொண்டேஅநத வனமதிற்பத்து
வருடம்மின்றுவரும வழியிறசுதிட்ட
மாமுனிவரங்கொண்டே அகஸ்தியன்றனைக்கண்
சேமவிற்சரங்கொண்டு துதித்தவன்றனைவிண்டு
சென்றுசடாயுஉற வாடப்பஞ்சவடியில்
நின்றுவிடாதமய லோடுகெஞ்சியபெரு
நீலிசூர்ப்பனகை காதுமூக்கரிநது
ாலஞாககுலகராகப ப பாாகருவநத
கரதூஷணத்திரி சிரசனஆதியரை
அரைநாழிகைதனில் மறலிநாடதனில்
அனுப்பிமான் உருவாய்வந்தமாரி

சன்கையாற் பிடித்திடவேபோன
தருணங்கண்டிராவணன் தபசிபோல
விரைவில்வந்துசீதையை நிலத்தினோடு
மேலெடுத்துச்செல்லும் போதுசடாயுவின்
ஆவியினைவதைத் தசோகவனத்தினில்
அரியசிறையிலிட வேசானகிதன்னைப்
பிரியும்அதிகதுயர் ஆலோசினம்கண்ணிப்
பின்மதிக்கவந்தனைச் சொர்க்கம்ஏற்றிச்சவரி
சொன்னவிதங்கொடு சுக்கிரீவனைத்தனது
சொந்தம்ஆக்கி அக்ரமமிகுவாலிதனை
முந்தவாட்டிவிக்ரம அனுமானை அளி
மொய்த்தகுழற்சீதைதனைத் தேடவிடுக்கஅவன்
உத்தமசம்பாதிதன்னால் உளவறிந்துகொண்டு
ஒப்பில்லாதவிஸ்வரூபங் கொண்டுமயேந்திரம்ஏறிச்
செப்பமாய்க்கடலைத் தாண்டிலங்கையிற்சேர்ந்து
திடமுறுலங்கணியை முதற்பலியிட்டுச்சீதையைக்
கடிபெறுலங்கைஎங்குந் தேடிக்காணாமற்பின்பு
காவல்மிகும்அசோக வனத்திற்றிரிசடையன்பு
மேவக்காத்திடவட முகம்பார்த்திருக்கக்கண்டு
விஜயகோதண்டராம தூதன்நான்என் றுசொல்லி
கைசைதருங்கணையாழி கொடுத்துத்திடமுங்கூறி
நாயகிசீதைதந்த சூடாமணிகைக்கொண்டு
தீயகிங்கரர்எண்ப தாயிரம்பேர்களொடு
செழுத்தஅசோகவனத்தையும் அழித்திடக்கண்டெதிர்த்தக்
கொழுத்தராட்சதசேனை யொடுசம்புமாலிமிகுத்த
கொடுமைசெய்பஞ்சசேனா திபர்களும் அக்ஷதனும்
மடியநாற்பதுவெள்ளம் அரக்கரோடிந்திரசித்தன்

பந்துபோர்செய்ய அனுமந்தன் அந்ததளத்தைச்
சிந்துசிந்தாக்கிஇந்திர சித்தன்தேரை அழித்
[illegible] வன்
வலியப்பிரமசாபத்தாற் கட்டராவணன் அப்போ
வாலில்நெருப்பையிட அந்தநெருப்பைலங்கையின்
மூலைக்குமூலை இட்டுக் கொளுத்திநீறாக்கிவிட்டு
உளமகிழ்கொண்டுமீண்டு வந்துசாமியைச்சேவித்து
அளிதிகழ்சூடாமணி தரக்கண்டுமகிழ்ந்தபின்பு
அடல்மிகுத்த எழுபதுவெள்ளவானரப்
படையும்ஒப்பில்அதின் அதிபரும்நீடிய
பரிவொடு தென்கடல் அருகில்நிறைந்தபின்
சரணம்அடைந்துநின் துணையடி தந்தருள்
சாமிஎன்றவி பீஷணன்மனக்குலங்கா
பூமிதந்துவிகாதஞ் செய்தவநுணன்மேற்
பொற்கணைவிடுத்தவனை வரச்செய்துபுஜபல
சித்திரக்கவிஇனங்கள் அதைக்கொடுவிரைவொடு
சேதுபந்தனஞ்செய்வித்து நீள்கடல்வளைந்திடு
மாதிரம்பயந்திடச் செயராவணன் இலங்கைதன்னை
வந்துமுற்றுகைசெய்துகொண்டு தம்பிஅங்கதன்மீதும்
முந்துவிக்கிரம அனுமந்தன் அம்புயந்தன்னிலும்ஏறி
மூதண்டந்திகில்மேவி அதிர்ந்திட
கோதண்டந்தனில் நாணொலிகொண்டுற
குரைகடல்வெருவிட நெடுநிலம் அதுதனை
ஒருசுமைஎனஉறும் உரகன்உடல்நெளிய
உயர்மதிகதிர்வழி பிசகிடநெடுவரை
அயர்தரவுடுஇனம் அதுதரையில்உதிர
அணிரதகஜபரி பரிசனவகைமிக
அணிஅணியொடுவர அதிவலிமைகள்சொலி

அனல்கக்கிடும் அத்திரசத்திரமழு
கனசக்கரம் நெட்டயில்பட்டயமொடு
கதிர்வீசுங்கதிர் முத்தலைசூலங்
கதைவார் அஞ்சிலைகைக்கொடுதாளங்
காளஞ்சின்னந்தாரைகள் மததளபேரிகள்பலவித
மேளம்பின்னும் நாகசரத்தொடுபூரிகைஒலிதர
வீரராவணன்தேரில் ஏறிபோர்க்களத்தில்வந்து
சேரவே அவன்சேனை வீரர்யாருமபோரில்முந்த
தீயவச்சிரமுஷ்டி துன்முகன்சுபாரிசன்
மாயபிரகஸ்தன்கெட்ட வன்மனங்கொள் நீசரை
வானரவீரர்கள்கொல்ல ராவணன் இவரைவெல்ல
சானகிமணாளன்வில்லிற் சோனைமாரிஎன்றுசொல்லத்
தருஞ்சரங்களைவிட்டு அவன்தேர்வில்லைமுறித்துத்
திகழ்மணிமுடிபத்துந் தரைமேல்உருளச்செய்து
திடமொடுசண்டைசெய்ய நாளைவாஇன்றுபோவென்று
விடைதரமனம்நொந்து தனியாய்ப்போய்லங்கைசேர்ந்து
வெற்றிசேர்கும்பகன்னனை நித்திரையிலிருந்தெழுப்பி
அத்தியில்சண்டைக்கும் விடுத்திட அவன்களத்தை
அடுக்கராகவன் அம்பு தொடுக்கவேகும்பகன்னன்
நொடிக்குள்காலுங்கையும்போய் படிக்குள்ளேமுண்டமாகி
நொந்துபின்சாமிதனைச் சிந்தனைபேசி
இறந்ததைராவண னறிந்ததிகாயனை
அனுப்பஅவன் பரிசனத்திரளினொடு
முனைத்தலைவர்களுஞ் சமர்க்களம் அணுகி
முச்சிரத்தன்வயமஸ்தன் கும்பன்தேவாந்தகனும்
அச்சமற்றரணமஸ்தன வம்பன்நராந்தகனும்
அனுமான்முதலோர்கையால் மடிந்திட அதிகாயன்
சினமாகியிளையோனோடமர் செய்தடிவாகச்

செய்திதெரிந்திந்திர சித்தன்தேறில்ஏறி
வெய்யசதுரங்கம் மொய்க்கப்போரில்விறி
விஞ்சுஞ்சுக்ரீவன் பனசன்சாம்பன் அனுமான்
வஞ்சம்அற்றநீலன் முதலினோர்கள்தமையும்
வாட்டக்கண்டு லட்சுமணன் தன்வில்விற்சரம்
பூட்டஇந்திரசித்தன் ரதகஜபரிஜனம்
புரவியாவற்றும்மாண்டு தானுபமிகமெலிந்து
இரவில்நாகபாசத்தை ஏவஅதனால்நொந்து
இலக்குமணன் முதலோராக ளத்திற்படுக்கராமன்
அக்கணமவ்விடமேவி திகைத்துவருந்தும்வேளை
அடல்சேர்கருடன்வர நாகபாசந்தெரித்து
விடயாவரும்எழுந்து போரில்வீறிக்கதிக்க
மிதமற்றசேனைசூழ உச்கிரங்கொண்டுவர்நெதிர்த்த
மதமுற்றசூரியகேது வசசிரதந்தன்பெரும்மக்கள்
மாலிசிங்கன்பேயன பரிதிக்கணணனையும்
ஆலம்அஞ்சுந் தீயகுருதிக்கண்ணனையும்
ஆர்க்குங்கவிதலைவர் மாய்க்கராமலட்சுமணர்
தாக்கமகரக்கண்ணன் அக்கினிகேதுமடிய
தசமுகன் அதைதெரிந் திந்திரசித்தனைவிட
வகைகொள்ளும்அவனகளயவநதுலட்சுமணனுடன்
வாதுசெய்தீளையோன் அப்போதுசரமாரிவெய்யன்
மீதிலெய்யஅதனால் அப்பாதகன்திரேகம்நைய
விண்ணில்மறைந்துதன் னூரைச்சேர்ந்துசூது
பண்ணிவெல்லஎண்ணி போருக்கமபனோடு
பாவிமகோதரனை ஏவஅவர்களம்
மேவிபலத்துடனே ராவில்அமர்விரிய
வீரம்அனுமான்தன்னால் அகம்பன்நிகும்பன்சிரங்களுருண்டபின்
சீறும்மகோதரன் கைச்சரங்கள்அழுந்திட வருந்ததிஇளையவன்

திகைக்குமவேளையில் இந்திர சித்தன் அங்குவா
மிகுத்தபிர்ம்மாஸ்திரமவிடுக்கத் தம்பிமுதலோர்சாய்ந்திட
வித்தகஸ்ரீராமன்கண்டு மெத்தவும ஆகுலங்கொண்
சித்தப்பிரமையாக அன்றுஉத்தம அநுமான்சென்
செழித்தசஞ்சீவிபருவதத்தைக்கொண்டுவந்தா
பிழைத்தனைவரும்போருக்கெதிர்க்கஇந்திரசித்தென்னு
பித்தனமாயாசீதையை வெட்டிநிகும்பலையா
கத்தின்சாலைசேர அதைத்தெரிந்திளையவன்
கணைமழைபொழிந்தரக்கனை செய்யுமயாகமழித்
க்ஷணமதில அவனசிரத்தைக் கொய்ததுதேவர்துதிக்கச்
சாமிபாதநேரில்வைக்க ராவணனறிந்ததன்மூலமர்செயவிட
பூமிபாரமான துஷ்டமூலபலங்கள் ஒர ஆயிரம்வெள்ளமும்
போரிலேறுதல்கண்டுவானர வீரரோடவேஒனறியாகிய
தீரராகவனசண்டமாருதம் ஆகிசோகன்பஞ்சுபோலகெட
திவ்வியமோகனாஸ்திரம்ஏவியெங்குமராமனுகத்தோனறிட
வெய்யர்யாரும்பார்க்குள்தாவித் தங்களிற்றாங்களேமாண்ட
வேதனையேசெய்யும சாதகபாதக
பாதகனனமகோதரனபோர்செய்து
படையுமபோய்ராகவன்கைக் கணைதன்னால்ஆவியுண்
மடியவேராவணன்தர்ச் சதுனமமெனமேலுங்கண்டு
வந்துபெருஞ்சண்டைசெய்பசசாமி ராவணனபத்துசிரத்தையும்
விண்ணதஅமபுகொண்டுகொய்யக்கொய்ய மீண்டும்மீண்டு முளைக்க
வேளையிலேஇதமாக பிரதாபகு
ணளவிபீஷணன் ஓதுமஉபாயத்தி
னால்இணையறுபிர மாஸ்திரம் அதனைவிட்டு
ஆலமனைவிழி ராவணன்நாபியில்வைத்த
அமிர்தகலசத்துடன் முடிகள்சிதறச்செய்து
இமையவர்முனிவர்கள் படுதுயரம்ஒழித்து

இணையில்எழிற்சனகி தீயினிற்குளித்தபின்பு
துணைவன்கவிப்படைவி பீஷணனுங்கற்பிலங்கு
தூயசீதைதன்னொடுபுஷ்பக மீதிலேறிமுன்வினைமுற்றிலும்
மாயவேசெய்கின்றமகத்துவ மானசேதுஅண்டையில்ஒப்பறு
மாதேவற்கன்றுநீராட்டி இறங்கித்திரும்பிமுன்வந்தவழிகளை
சீதேவிக்கன்பொடுகாட்டிமகிழ்ந்துநடந்து பன்னருந்தவஙிலை
திகழும்பரத்துவாசன் மடத்தினிற்சேர்ந்தபின் திடத்துடனனுமானை
புகழும்பரதராஜன் இடத்தினிற்சேவிடகொடிக்குள்ளே அவன்போன
போதுசாமிவரவைக் காணேனென்றுபரதன்
ஓதுந்தீயினில்விழப் போகக்கண்டுஅனுமன்
மோதிரந்தந்துபதறுதேரகுபதிவரமுனிமடம்வந்துசேர்ந்தானென்று
ஆதரவுஞ்சுட்டிக்கூறி பரதனிடம் விரைவில் விடைகொண்டு ஆஞ்ச
அச்சணந்திரும்பிலோ சரட்சகன் உண்ணும்வேளைக்க [நேயன்
ரைக்கணபமுந்திவநதோதப் பட்சங்கொண்டவனைக்
வைத்துவரதன்புசித்துப் புஷ்பகமதிற்கதித்து
சத்யபரதன் துதிக்க உத்தமகுகன்மதிக்க
தகைமைமேவிய அயோத்திநகரில்வந்து
திகழும்மூவுலகும் போற்றஒளிசிறந்த
சித்திரமிகுந்த சிங்காசனமீதினில்
அற்புதம்உற்றசெந் தேன்மொழியாள்எம.
தன்னைசீதையோ டமர்ந்துபேரிகையு
மன்னுதாளமிரு தங்கநாகசுர
வாத்தியம்ஒலிக்கவரு சுரர்மருமலர்கொடு
நாற்றிசை இறைக்கவெகு முனிவர்கள் மணிமுடி
நரபதிகளும்வா னரபதிகளும்பூ
சுரர்துதிசொலவே கவரிகள் அருகே
அயலட்சுமணனுடன் சத்துருக்கனும்வீசிட
நேயம்உற்றபரதன்உட் களித்திதம்பேசியே.

நிலவெழிதருசந்திர வட்டக்குடைகவிக்க
பலமிகுஅனுமந்த னற்றுணைஅடிபிடிக்க
பகர்வசிஷ்டனால் மகுடாபிஷேகங்கொண்டு
ஜெகதலத்துள்ளோர் துதிபேசச்சேர்வைதந்த
தீனதயாநிதியே அடியார்உள
மேநிலையாய்நிதம வாழ்வரதாஉயர்
வேதாஅரிஅனை மேவுவினோதா
தாதாசுரர்முதலோர துதிபாதா
சதுரனேசரா சரங்களைத்தருமூலா
துதிசெய்ராஜசே கரன்றமிழ்க்கனுகூலா
சுமுககுணசுந்த ராங்கசுகிர்தநய
விமலவிபவவிந்தை யோகநிதிரகுஜப
கோதண்ட தீக்ஷாகுருமேவ-பக்தரிதப
கோகனகமலா மருமேவ.

அருணாசலக் கவிராயர் பாடிய இராமநாடகத்தின் அருமை பெருமை தமிழ்நாடு முழுவதும் அறியும். உதாரணமாக, ஸ்ரீராமர் வரலாற்றைக்கௌசிகர் கூறுவதாகவும் கூனியைக் கைகேயி கோபிப்பதாகவும இயற்றப்பெற்றுள்ள கீர்த்தனைகளைக் கீழே காட்டியிருக்கிறது, காண்க.

தரு. ராகம்-சங்கராபரணம். தாளம்-ஆதி.

பல்லவி.

ஆர் என்றெண்ணாமலே நாளும்-இவன்
அதிசயங்களைச் சொல்லக்கேளும்.

அனுபல்லவி.

சூராதி சூரன் ராமனெனும்பேரன்
சுகுணதீரன்ரவி குலகுமாரன் இவனை(ஆர்)

சரணங்கள்.

1. ஆதியில் தசரதன் புத்திரகாமேஷ்டி
யாகம் செய்யவென்று தொடுத்தான்-வந்த
பூதம்தந்தபா மானத்தை நாலாகப்
பொன்னின் கமலத்தில் எடுத்தான்-அதில்
சோதி கோசலைக்கொன்றும் கைகேசிக்கொன்றும்
சுமத்திரைக்கிரண்டுமாக் கொடுத்தான்-மூத்த
பேதைகோசலை இடத்திந்தராகவன்
பிறந்தான் என்கவலையை விடுத்தான்-இவனை(ஆர்)

2. தலைபாம்பரதன் லட்சுமணன் சத்துருக்னன்
தம்பியர் இவனுக்கு நேயம்-மிக்க
கொலையாளன் சுவாகுவையும் சேனையையும் இவன் அம்பு
கொண்டுபோனதென்ன மாயம்-நான்
உலையாதென் வேள்வியை முடித்தானே இவன் அம்பால்
உருண்டதே தாடகை காயம்-மெத்த
மலைபோலே வந்ததும பனிபோலே போச்சிந்த
மகராசன் செய்தச காயம்-இவனை(ஆர்)

3. தூரத்தும் சாபம் அகலிகைக்குக்காலினாலே
துடைத்தானே அவள் உடல் மாசை-சொல்லும்
பெருக்கம் என்ன இவன் பிறக்கவே உலகெங்கும்
பிறந்ததே மங்கள ஓசை-உங்கள்
பருத்தவில் இவன்கைக்குப் போதுமோ போதாதோ

பார்க் ... றாய் இ ...

வரச்சொனாலும் வரக்கிடைக்குமோ வலிவிலே

வந்தானே நீங்கள் செய்த பூசை-இவனை(ஆர்

தரு. ராகம் - ஆனந்தபைரவி. தாளம் - ஆதி.

பல்லவி.

ராமனுக்கு மன்னன் முடிதந்தாலே நன்மையுண்டொருக்காலே

அனுபல்லவி.

பாமரமே உனக்கென்னடி பேசமே
பழம் நழுவிப்பாலில் விழுந்தாற்போல் ஆச்சே(ராம

சரணங்கள்.

ந சொன்னாய் எனக்கெவா நேரடி
பிரமாதிகளும்வரு வாரடி
இதுவேநல்ல சீரடி
வாயாடாதே பாரடி
ஆடி எனக்குச்சரி(ராம

பரசுராமன் கெர்வம் தீர்த்தவண்டி
நம்மையெல்லாம் காத்தவண்டி
பட்டம்கட்ட ஏற்றவண்டி
காணுபேரில் மூத்தவண்டி
அவன் என்கண்மணி(ராம

# சபாரத்தின முதலியார் சரித்திரம்



சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை

சிவமயம

குகதாசா

# சபாரத்தின முதலியார் சரித்திரம்

திருமபலாட பூ

சே வெ. ஜம்புலிங்கம் பிள்ளை

எழுதியது

சென்னை

சோலடன அசசு கூடம

1923

சிவமயம்

# முகவுரை

இச்சரிதத்தலைவராகிய முதலியாரவர்களையும் அவர்கள் சைவாபிமானத்தையும் சைவவுலகம் நன்கறியும். இவர்கள் சரித்திரத்தை என்றும் நிலவும்படி செய்தல் சைவர்களது கடமையேயாம். தமது உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றினையுஞ் சைவாபிவிருத்தியின் பொருட்டே தத்தஞ் செய்த இப்பெரியாரது சரித்திரத்தை யான் எழுதத் துணிந்தது அவர்கள் மாட்டு யான் கொண்டிருந்த அன்பிற்கு அடையாள மாகவேயாம்.

இவ்விடத்தில் முதலியாரவர்களுக்கும் எனக்கும் ஏற்பட்ட நட்பின் தன்மையைக் குறிப்பிடுவது மிகையாகாதென்று நினைக்கின்றேன் :—

1910௵, இவர்கள் எழுதிய "ஈச்சுர நிச்சயம்" என்னும் தமிழ்ப் புத்தகத்தை யான் படிக்க நேர்ந்தது. அப் புத்தகத்தின் அருமையை நோக்க அதன் ஆசிரியராகிய முதலியார் மீது அதிக மதிப்பு இயல்பாகவே ஏற்பட்டது. சிலகாலத்திற்குப் பிறகு, அவர்கள் சித்தாந்த தீபிகையில் எழுதிவந்த பல அரிய விஷயங்களைப் பார்வையிட்டேன். அதனால், அவர்களிடத்து யான் முன்னரே கொண்டிருந்த அன்பு முறுகி வளர்ந்தது; அவர்களுடன் கடித மூலமாகத் தொடர்பு வைக்கவும் தூண்டியது. 1913௵க் கடைசியில் Essentials of Hinduism என்னும் சிறந்த நூலை அவர்கள் வெளியிட்ட பின்னர், அதனைப் பெற்று வாசித்ததின் பய

னாக அவர்களுக்கும் எனக்கும் நேசம் அதிகரித்தது 1916௵ டிசம்பர்மீ முதலியாரவர்களைச் சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் அக்கிராசனராகச் சடுதியில் தந்திமூலமாக அழைத்த போது, அவர்களுக்குப் பல முக்கியமான வேலைகளிருந்தும், சைவாபிமானங் கருதியும் எனது வேண்டுகோட் கிணங்கியும் வர ஒருப்பட்டனர் அப்போது (8-12-'16) அவர்கள் எனக்கு எழுதிய கடிதம் வருமாறு:—

* * *

I thought over the subject and consulted some of my friends and came to the conclusion that I should accept the offer though it may be some inconvenience. The request having come through you, I could not have declined it.

I have fixed my son's marriage for to-morrow and there are other matters in which my presence is required. Anyhow, I must be prepared to sacrifice something for the benefit of my religion and I have, therefore, accepted the offer.

* * * *

1916௵ டிசம்பர்மீ 28உ தான் யான் அவர்களை முதலிற் சந்திக்கும் பாக்கியத்தைப் பெற்றது. அவர்கள் எழுதிய புத்தகங்களாலும் பல அரிய வியாசங்களாலுமே எனக்குச் சைவசித்தாந்தப்பற்று உண்டாயிற்று என்று கூறலாம். அதனால் அவர்களை எனது குருவாகவும் தந்தையாகவும் மதித்துவந்தேன். அவர்களும் என்னைத் தமது சொந்தக் குமாரனைப் போலவே நேசித்து வந்தார்கள். அவர்கள் புத்தக விற்பனை, புத்தகமச்சியற்றல் முதலிய பல சொந்தக் காரியங்களை என்னிடமே முற்றும் ஒப்பித்து வந்தனர். 1922௵ காசியாத்திரையாகச் சென்னைக்குத் தமது குடும்பத்துடன் வந்திருந்தபோது என்னிடமே தங்கியிருந்தனர். தமது சொந்த ஊரவர்களும் வேறு

சிநேகாகளும் பலர் இருந்தும் அவர்கள் என்னுடன் தங்கியிருந்தமை அவர்கள் என்மீது வைத்திருநத அன்பின் பெருக்கைக காட்டுகின்றது. உற்று நோக்குமிடத்து, அவர்களுக்கும் எனக்கும் ஏற்பட்ட தொடர்பு திருவருட் சகாயததாலேயாம். இதனைப்பற்றி முதலியாரும் எனக்கு 25-8-'15ல எழுதிய கடிதமொன்றில விதநது பாராட்டியிருக்கினறனர் அது பின்வருமாறு:—

* * * *

We do not know each other personally, still I think there is some Providential influence that has linked us by real friendship. May this continue long!

* * * *

இது காறுங கூறியவாறறால், முதலியாரவர்களுக்கும் எனககும இருநதுவநத சமபநதம தெற்றெனப புலபபடும. தறபுகழ்ச்சி கருதி யான் இவைகளைக கூறவநதவனலலன். இது உண்மையேயாம்.

முதலியாரவர்கள் சரித்திரததிற்கு வேண்டிய விஷயங்களை உபகரித்த அவர்களது குமாரர், ஸ்ரீமான் ச. நவரத்தின பிள்ளையவாகளுக்கும, இநநன முயற்சியிற் பல வுதவி புரிநத எனது நண்பா, கழுத்துறை ஸ்ரீமான் செ. வேலாயுதம் பிள்ளையவர்களுக்கும் என் மனமாாநத வநதனமளிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

எனது அறியாமை காரணமாக இதன்கண் ஏதேனுங் குற்றம் ஏற்படின் அதனைப் பொறுப்பது அறிஞர் கடனாகும்.

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந்தெய்தும் பராபரமே.

(தாயுமானவர்)

திருமயிலாப்பூர்,
ருதிரோற்காரிஞ
ஆவணிமீ உசுஉ

இங்ஙனம்:

சே. வெ. ஜம்புலிங்கம்.

சிவமயம்

# சபாரத்தின முதலியார் சரித்திரம்

ஈழ மண்டலத்தைச் சார்ந்த யாழ்ப்பாணத்திலே, கொக்குவில் என்னுங் கிராமத்திலே, சைவ வேளாளர் குலத்தை விளக்க வந்த குலசேகர முதலியார் மரபிலே கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டினிடையிலே சபாபதிப் பிள்ளை என்பவர் ஒருவரிருந்தார். அவர் முல்லைத்தீவுக் கச்சேரியிலே பிரதான லிகிதர் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தார். அவர் அக்காலத்தில் பிரபல செல்வந்தராய் விளங்கிய பெரிய முருகேசு என்பவரின் புத்திரியாகிய ஆச்சிமுத்து அம்மையை விவாகஞ் செய்தனர். அவ்விருவருக்குஞ் சென்ற காலயுத்தி௵ (1858 கி. பி.) சித்திரை௴ ௩௨ புதன்கிழமை, அசுவினி நட்சத்திரங்கூடிய சுபதினத்திலே, ஒரு சற்புத்திரர் பிறந்தார். அப்பிள்ளைக்கு ஸ்ரீ நடராசப் பெருமானது பரியாயப் பெயர்களிலொன்றாகிய "சபாரத்தினம்" என்னும் பெயரை இட்டனர். அப்பெயர் சிறு பிராயத்தில் இடுகுறியாக அமைந்த போதிலும் காரணவகையால் அது சாலவும் ஏற்புடைத்தென்பது இப்பிள்ளையின் பிற்காலத்துச்சீவிய சரிதத்தால் புலனாகும்.

## கல்விப் பயிற்சி

இப்பிள்ளைக்கு உரிய காலத்திலே, அவர் தந்தையார் வித்தியாரம்பஞ் செய்து வைத்தனர். முதல் முதல் தமிழ்க் கல்வியை அக்காலத்துப் பிரபல பண்டிதராக விளங்கிய கொக்குவில் சுயம்பு நாதர் என்பவரிடங் கற்றார். ஆங்கிலக் கல்வியை இப்போது Central College என்று வழங்கப் பெறும் அப்போதைய Cock's பாடசாலையிற் பயின்றார். தமிழை இக்காலத்துப் பிள்ளைகளைப்போல அசட்டை செய்யாமல் ஆங்கிலத்தோடு ஒருங்கே விரும்பிக் கற்றார். ஸ்ரீலஸ்ரீ நாவலர் பெருமானிடத்தும் சிலகாலம் அவர்களது பாடசாலையில் தமிழ்க் கல்வி பயின்றனரென்ப அப்போது இவருடன் ஒருங்கு கற்றவருள் முக்கியமானவர், யாழ்ப் பாணச் சைவப்பிரகாச வித்தியாசாலையின் அதிபராக விளங்கும் ஸ்ரீமத் த. கைலாச பிள்ளை அவர்களாவார். நாவலப் பெருந்தகையாரது அருட்பார்வையின் திறத்தால் இவருக்குச் சமயபத்தி இளமையிற்றானே வேரூன்றியது. நாளேறவேற அது பெரிதும் வளர்வதாயிற்று. நாவல ரவர்களைப்போலவே இவரும் தமது பத்தொன்பதாம் வயது முதல் சமயச் சார்பாக உழைக்கத் தலைப்பட்டனர்.

## சமய உழைப்பு

இருபது முப்பது வருடங்களுக்கு முன்னர் Charles Bradlaugh என்னும் தத்துவ ஞானி ஒருவரிருந்தனர். அவர் பிரபல பண்டிதரேயாயினும் ஊழ்வலியால் 'கண்டதே காட்சி', 'கொண்டதே கோலம்', 'எல்லாம் இயற்கை அமைப்பே' என்னும் நீரீச்சுரவாதக் கொள்கையைத் தழுவி யிருந்தார். அதனோடு அமையாது, தம் கொள்கையைப் பரப்புதல் நிமித்தம் அநேகம் சுவடிகளையும் வெளியிட்டனர். அச்சுவடிகளைக்கண்டு நம்மவருட் சிலர் மருண்டனர். அவ ரது கொள்கை நம் நாட்டிலும் சில தமிழ்ப் பத்திரிகை வாயிலாகவும் பிறவாற்றாலும் பரவத்தொடங்கியது. நமது

சமயத்திற்கும் தேயத்திற்கும் அதனால் பெரிதும் கேடு சூழ்வதாயிற்று. உலகாயதம் நமது நாட்டிற் புகுந்ததைக் கண்டு சகிக்கலாற்றாது, நமது பிள்ளையவர்கள் அதனையக் காலத்திற் கேற்றவாறு தருக்க முறைப்படி கண்டித்துப் பலகடிதங்கள் யாழ்ப்பாணத்து "உதயபானு" என்னும் பத்திரிகை வாயிலாக வெளியிட்டனர். இவரது கண்டனங்களின் பயனாகப்போலும், நீரிச்சுரவாதம் நமது தமிழ் நாட்டிலிருந்து சிறிதுகாலத்திற்கெல்லாம் நீங்கியது அப்போது இவர் எழுதிய கண்டனங்களே பிறகு சில பல திருத்தங்களுடன் "ஈச்சுரநிச்சயம்" என்னும் பெயருடன் புத்தக ரூபமாகப் பதிப்பிக்கப்பட்டன.

## உத்தியோகம்

இவர், 1878ஆம் அரசாங்க உத்தியோகத்திற் சாமானிய லிகிதராகவே முதலில் அமர்ந்தார். பிறகு தமது ஊக்கத்தினாலேயே மேலான பதவிக்கு வந்தார். முல்லைத்தீவு, கொழும்பு, கண்டி முதலிய இடங்களிலும் உத்தியோகம் செலுத்தினார். சிலகாலம் யாழ்ப்பாணக் கச்சேரி முதலியார் என்னும் உத்தியோகத்தை நடாத்தினார். அப்பால் யாழ்ப்பாணத்து டெபுடி பிசுக்கல் ஆகவும் விளங்கினார். இவ்வுத்தியோகத்தை ஏறக்குறைய பத்து வருடம் வகித்து 1921ஆம் ஆறுதல் அடைந்து, உபகார வேதனம் பெற்றார். இவ்வுத்தியோகம் மிகப் பொறுப்புடையது. அதனை நமது முதலியாரவர்களுக்குக் கொடுத்தது இவர் மாட்டு அரசாங்கத்தார் வைத்திருந்த அபிமானத்தைக் காட்டுகின்றது. மேலும், அரசாங்கத்தார் தமது நன்மதிப்பிற்கு அறிகுறியாக 1905ஆம் முதலியார் * என்னும் பட்டத்தை அளித்தனர். பிறகு, 1917ஆம்

---

* "முதலியார்", "இராசவாசல் முதலியார்" என்பன இலங்கை அரசாங்கத்தாரால் சுதேசிகளுக்குக் கொடுக்கப்படும் பட்டங்கள். இவை, இராவ் சாகிப், இராவ் பகதூர் முதலிய இந்திய பட்டங்களைப் போன்றவை.

சமாதான நீதிபதி (J. P.) என்னும் கௌரவ உத்தியோகத்தினைக் கொடுத்தனர். கடைசியாக 1919௵ இராசவாசல் முதலியார் என்னும் பட்டத்தினையும் தந்தனர். உத்தியோகத்திலிருந்து இளைப்பாறிய பினனரும் Head-men Commissionல் ஒரு அங்கத்தினராக நியமித்து கிராமாதிகாரி முறையினைப் புதுப்பிக்க வேண்டினர். ஆனால் இன்னும் அரசாங்கக் கடமைகளை செலுத்தி நெடுங்காலம் உபகார வேதனம் பெறும் பாக்கியத்தை முதலியாரவர்கள்

## குடும்ப வாழ்க்கை

இவரோடு உடன் பிறந்தவர் மூவர். தமக்கையின் பெயர் அன்னபூரணி அம்மாள்; தம்பியின் பெயர் ச. குழந்தைவேற் பிள்ளை; தங்கையின் பெயர், சின்னத் தங்கச்சி அம்மாள். தமக்கையுந் தம்பியும் இவருக்குமுன காலஞ்சென்றனர்; தங்கை இன்னும் சீவந்தராக இருககின்றனர். தம்பி இவர்மாட்டு அதிக விசுவாச முள்ளவா. அவருக்குச் சந்தானமில்லை. அவர் 1920௵ இறந்தபோது அவருக்கு அந்தியேட்டி முதலிய அபரக்கிரியைகளை நமது முதலியாரவர்களே இராமேசுரத்திற் செய்தனர்.

1889௵, நமது முதலியாரவர்கள் பொன்னம்பலப் பிள்ளை என்பவரின் புத்திரியை விவாகம் செய்தார். கனகம்மாள் என்னும் அப்பெண்மணியின் மாட்டு நவரதகினம் என்னும் ஒரு ஆண்மகவும், பரஞானம் என்னும் பெயருள்ள ஒரு பெண்மகவும் பிறந்தன. 1906௵ அவ்வம்மையார் நோய் வாய்ப்பட்டு இரண்டு குழந்தைகளையும் விட்டு இறந்தனர். இரண்டு வருடங்கழித்து, தமது மனைவியாரின் தங்கையாகிய சொர்ணம்மாளை விவாகஞ்செய்து கொண்டனர். அவரிடத்து ஒரு பெண்மகவு உதித்தது. அப்புதல்வியின் பெயர் அற்புதாம்பிகை. இப்பெண்மணி தனது 17-ம் வயதில் க்ஷயரோகங்கண்டு கன்னிகையாகவே இறந்தது. அம்மகளிற்கு அபரக்கிரியைகள் செய்யு நிமித்தம் உடனே தம் மனைவியாருடன் 1922௵ பிப்ரவரி௴ காசிக்குப் புறப்பட்

டனர். வழியிலுள்ள பற்பல தலங்களைத் தரிசித்தனர். மீட்டும் தமது ஊருக்குத் திரும்ப நாலைந்து மாதங்களாயின. இடையே இவருடைய மனைவியாருக்குப் புத்திர சோகத்தால் நோய் உண்டாகி, அது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தது. தமது ஊரை யடைந்த சில தினங்களுக்குள் அவ்வம்மையார் பரகதியடைந்தனர். தமது அருமைப் புத்திரியின் அகால மரணத்தால் முன்னரேயே துக்கித்துக் கொண்டிருந்த முதலியாருக்கு இது பேரிடியாகவே இருந்தது. ஒன்றின் பின் ஒன்றாக நிகழ்ந்த துக்க சம்பவங்களின் காரணமாக ஏற்பட்ட மனக்குழப்பத்தினால் முதலியாரது தேகாரோக்கியம் நாளுக்கு நாள் குறைவு பட்டுக் கொண்டே வந்தது. பின்னர்ச் சிலமாதங்களுக்குள், அதாவது துந்துபி௵ ஐப்பசி௴ 30௳ புதன்கிழமை ஏகாதசி திதி, உத்திர நக்ஷத்திரம் காலை 7½-மணிக்குச் (1922௵ நவம்பர்௴ 15௳) சிவபதம் அடைந்தனர். இறக்கும்போது வயது அறுபத்துநான்கு. இவர் இந்தியாவிற்குவந்து பல அரிய நூல்களை வெளியிட வேண்டுமென்றும், சமயாபிவிருத்தியின் பொருட்டே தமது எஞ்சிய காலமுழுவதையும் செலவிட வேண்டுமென்றும் எண்ணங்கொண்டிருந்தனர். அவ்வெண்ணம் நிறைவேறுதபடி திருவருள் தடுத்தது மற்றொரு பிறவியிற் குறைவற முடிக்க வேண்டுமென்பது கருதிப்போலும்!

## இயற்றிய நூல்கள் முதலியன

மேலானதும் மிகப் பொறுப்புள்ளதுமான அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்திருந்தும் தமக்கு ஏற்பட்ட மிகக் குறைவான அவகாச நேரத்தினையும் சமய சம்பந்தமாகவே உபயோகித்து வந்தனர். ஆங்கிலப் பத்திரிகைகளிலும் தமிழ்ப் பத்திரிகைகளிலும் பல நுண்ணிய விஷயங்களை எழுதி வெளியிட்டனர்; சில அரிய நூல்களையும் காலத்திற்கேற்றவாறு எழுதி அச்சிற்பதிப்பித்தனர். அவை பின் வருவன :—

(1) சீவான்ம பேதம்:—சீவான்மாவிற்கும் பரமான்மாவிற்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துரைப்பது. மாயா வாதத்தை ஒருவாறு கண்டிப்பது. 1890ஆ அச்சிடப்பட்டது.

(2) ஈச்சுர நிச்சயம்:—நாத்திகத்தை மறுத்து, சைவ சித்தாந்தத்தை ஒருவாறு நிலை நாட்டுவது. வசன நடை போற்றத் தகுந்தது. 1896ஆ யாழ்ப்பாணத்தில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

(3) Essentials of Hinduism—இந்து மதத்தின் முக்கியாம்சங்கள் (சைவ சித்தாந்தப் பார்வையாக):—ஆங்கிலத்தில் மிக விரிவாக எழுதப்பட்டது. பலரால் நன்கு மதிக்கப்பட்டது. சந்தேகத்துக்கிடமான பல சமய விஷயங்களைத் தெளிவாக விளக்குவது. 1913ஆ சென்னையிற் பிரசுரிக்கப்பட்டது.

(4) பிரபஞ்ச விசாரம்:—ஈச்சுர நிச்சயத்தின் இரண்டாம் பாகமாகநிலவுவது. உலகாயதம் முதற் பல திறத்தன வாயமதங்களைக் கண்டித்துச் சைவசித்தாந்தமே மெய்ச்சமயமென்று தடைவிடைகளால் நிரூபிப்பது. வசன நடையிற் சிறந்தது. 1918ஆ சென்னையில் வெளியிடப்பட்டது.

(5) திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் சரித்திரம்:—சம்பந்தரது திவ்விய சரித்திரத்தை ஆங்கிலத்தில் உரைப்பது. சரித்திரத்திலுள்ள நுட்பங்களை விளக்குவது. கால ஆராய்ச்சியைச் செவ்விதாக எடுத்துக் கூறுவது. 1920ஆ சென்னையிற் பிரசுரமானது.

(6) திருக்குறள் (அறத்துப்பால், இல்லறவியல், இறுதிப்பத்ததிகாரத்தின்) ஆங்கிலமொழி பெயர்ப்பு:—பிறனில் விழையாமை முதல் புகழ் ஈறுகப் பத்ததிகாரங்களின் சூத்திரங்களை ஆங்கிலத்தில் மாணவர் உபயோகத்தின்பொருட்டு மொழி பெயர்க்கப்பட்டது. இதனை, ஸ்ரீ ம. வே. திருஞான சம்பந்தப் பிள்ளை அவர்கள் தாம் 1921ஆ வெளியிட்ட Tamil Text Notesல் சேர்த்து அச்சிட்டிருக்கின்றனர்.

மேற்கூறிய புத்தகங்களன்றி, தமது யௌவன பருவத்தில் சமய சம்பந்தமான அநேக துண்டுப் பத்திரங்

களும் சிறுபுத்தகங்களும் கிறிஸ்துமத கண்டனமாகவும் தோத்திரப் பாக்களாகவும் [விவிலியகுற்சிதம், முன்னைநாத சுவாமி வடிவழகம்மை ஆசிரிய விருத்தங்கள் முதலியன] செய்து வெளியிட்ட துண்டு. அவை இப்போது கிடைப்ப தருமை.

வெளியிட எண்ணியிருந்த நூல்கள் :—

(1) மறுபிறப்புண்மை, இந்து சாதனத்தில் சிறு பாகங்களாக வெளிவந்தது. அருமை வாய்ந்தது.

(2) பண்டைத் தமிழர்களின் சமயக் கொள்கை (Religion of the Ancient Tamils) இதுவும் சிறு பாகங்களாக இந்து சாதன ஆங்கிலப் பத்திரிகையில் வெளி வந்துளது. பழைய தமிழ் நூல்களிற் கூறியபடி பண்டைத் தமிழர்களின் கொள்கை வைதிக சைவ சித்தாந்தமே என்று தக்க ஆதாரங்களுடன் நிலைநாட்டுவது.

(3) ஈச்சுர நிச்சயம் (இரண்டாம் பதிப்பு), முதற் பதிப்புப் பிரதிகள் முழுவதும் செலவாகி விட்டமையால், இரண்டாம் பதிப்பைச்சில மாற்றங்களுடன் அச்சிடக் கருதி யிருந்தனர்.

(4) சைவோத்தரம், சைவசமயத்தின் ஏற்றத்தைக் கூறும் வசன நூல்.

இந்து சாதனம், சித்தாந்த தீபிகை, சித்தாந்தம், கலா சிந்தாமணி முதலிய பத்திரிகைகள் வாயிலாக வெளிவந்த விஷயங்களாவன :—

## (ஆங்கிலம்)

1. The Tamil Nationality
2. Religion and National Progress
3. The Advaita Philosophy
4. Religious Toleration
5. Practice and Religion
6. Siva Linga

7. Siva Rupa
8. Saiva Siddhanta
9. Vedanta
10. Philosophy of Karma
11. Hindu Religious Awakening
12. Faith—*(New Reformer)*
13. Proselytism—*(Everyman's Review)*
14. Evolution of Religion
15. Culture
16. Temples
17. Religion
18. Reason and Feeling
19. Our Food
20. Hindu Social Reform
21. Are meat and drink necessary for our progress?
22. Religious Education
23. Our Reformers
24. The Caste Question
25. Our National Spirit
26. Religion without Rituals
27. Amateur Theatricals
28. Bhagavat Gita—
*(Indian Patriot, Madras)*
29. Who is a Jivan Mukta?
30. Law of Karma
31. Religion of the Ancient Tamils—
*(Hindu Organ)*

## (தமிழ்)

1. ஆணவமலம்
2. விசுவாசம்
3. சமய அருட்சி
4. கிரியாமார்க்கம்
5. ஞானம்
6. மெய்ச்சமயம் } சித்தாந்தம்.
7. சமயோற்பத்தி
8. தருமநெறி
9. சிவஞான போதோற்ட
10. சிவஞானம்
11. வேத சிவாகமங்கள்
12. தெய்வநீதி
13. தருமநெறி
14. ஆணவ மலவிடுதி
15. தமிழ்க்கல்வி } கலாசிந்தாமணி

பத்திரிகைகளில் வெளியிட்ட விஷயங்களை யெல்லாம் ஒருங்கு சேர்த்து அச்சிடவும் எண்ணியிருந்தனர்; காலம் வாய்க்கவில்லை.

முதலியாரவர்கள் செய்யுளியற்றுவதிலும் சமர்த்தர். தமது வழிபடுகடவுளாகிய கொக்குவில் கிருபாகர சிவசுப்பிரமணிய சுவாமி மீது அநேக தோத்திரப்பாக்களை இயற்றியிருக்கின்றனர். முனீசுரத்திலெழுந்தருளிய முன்னைநாத சுவாமி மீதும் வடிவழகம்மை மீதும் ஆசிரிய விருத்தங்கள் தமது நண்பர் ஸ்ரீ செல்லையாப் பிள்ளை யவர்கள் வேண்டுகோட்கிணங்கி 1887ஆ இயற்றி வெளியிட்டனர். அன்றியும் 'கந்தர் கலிப்பா' என்னும் அரிய பிரபந்தமொன்றும் செய்துள்ளார். அப்பிரபந்தத்தினுள் தமக்குத் தோற்றிய அநேக சந்தேகங்களைத் தக்க சமாதானத்துடன் ஒவ்வொரு பாடலில் விளக்கியிருப்பதாக அவரே எம்மிடம் நேரே

கூறியுள்ளார். முந்நூறு பாடல்களுக்குமேல் பாடப்பெற்றுள்ளன. ஆனால், நூல் இன்னும் முடிவு பெறவில்லை. பாடல்கள் மிக ஆழ்ந்த கருத்துகளைக் கொண்டன.

## குணநிசயம் முதலியன

வைதிக சைவ சமயச் சார்பாக ஆங்கிலத்திலும் தமிழிலும் விஷயங்களை அனைவரும் அறியும்படி மிகத் தெளிவான நடையில் தர்க்க முறைப்படியும் பட்சபாதமின்றியும் எழுதி வெளியிடுவதில் இவருக்குச் சமானமானவர் இலரென்பதே பலர்கருத்து. இவருக்குப் புராதன பழக்க வழக்கங்களில் பற்றதிகம். பாரம்பரியத்தில் மிகுதியும் விசுவாசமுண்டு. தம்மனச் சான்றுக்கு விரோதமாகக் காணப்பட்ட விஷயங்களை நியாய வாயிலாகக் கண்டிப்பதில் அதிதீரர். சைவாகம சாத்திரங்களை நன்கு கற்றறிந்து அவற்றுட் கூறியபடி ஒழுகுபவர். ஆலயவழிபாடு, சைவக் கிரியானுட்டானம் முதலியவற்றை நியமமாகக் கொண்டவர். மறைகள் நிந்தனை சைவ நிநதனை பொறுமனமுடையவர். தமிழ்ப்புலமை வாய்ந்தவர். பெரும்புலவர்களான சுன்னாகம் குமாரசாமிப் பிள்ளை முதலியோரால் நன்கு மதிக்கப்பட்டவர். வடமொழிப்பயிற்சியு முள்ளவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் வசனம் எழுதுவதில் மிகச் சமர்த்தர். புலவர்களும் இவர் வசன நடையைப் பெரிதும் பாராட்டுவர். மிகக்கூரிய மதிநுட்ப முடையவர். இவருடைய மனம் எப்போதும் யாதேனும் ஒரு விஷயத்தை ஆராய்ந்து கொண்டே யிருக்கும். சித்தாந்த நுணுக்கங்களை நுட்பமாக ஆராய்ந்தறிந்தவர். தாம் முடிவு கட்டிய அநேக சித்தாந்தக் கருத்துகள் இரண்டு மூன்று வருடங்களுக்கு முன் வெளிவந்த சிவஞான போதமாபாடியத்துள்ள விஷயங்களோடு ஒத்திருக்கக்கண்டு அகமிக மகிழ்ந்தவர். தற்புகழ்ச்சி, தலையெடுப்பு, டாம்பீகம் முதலிய குற்றங்களில்லாதவர். சிவபத்தி, அடியார் பத்தியிற் சிறந்தவர் தரும சிந்தனை உடையவர். உண்மைச் சைவர்களை நேசிப்ப

வர். போலிச்சைவர்களை வெறுப்பவர். வைதிக சைவர்களால் நன்கு மதிக்கப்பெற்றவர். சுப்பிரமணிய உபாசகர். குகதாசர் என்னும் புனைவுப் பெயருடன் பல அரிய விஷயங்களைப் பத்திரிகை வாயிலாக வெளியிட்டவர். யாக்கை நிலையாமையை நினைநது நினைந்து தம் வாழ்நாளை நல்வழியிற் செலவழித்தவர். பிரசங்க ஆற்றலமையப் பெற்றவா. பிரபுத்துவ முடையவர். சமயாபிமானமன்றி, தேசாபிமானமும், பாஷாபிமானமும் நிரம்பப் பெற்றவர். தூத்துக்குடி சைவ சித்தாநத சபை, சென்னைச் சைவசித்தாந்த மகா சமாஜம, யாழ்ப்பாணச் சைவ சித்தாநத மகா சமாஜம் முதலிய பேரவைகளுக்குச் சபாநாயகராகத் தேர்நதெடுககப் பட்டவர். யாழ்ப்பாணச் சைவ சித்தாநத பரிபாலன சபை, யாழ்ப்பாண இந்துக் கல்லூரி முதலிய அறநிலைகளின் காரியதரிசியாக இறக்குமகாறும் விளங்கியவர். கொக்குவில கிருபாகர சிவ சுபபிரமணிய சுவாமி கோயில் தருமபரிபாலகர். இக்கோயிலிலேயே தமது ஓழிவு நேரங்களைச்சிவதொண்டு புரிவதிற் கழிததவர். இக்கோயில் இவரது பாட்டனாரால் கட்டப்பட்டது.

சநததியாா

இவருடைய குமாரராகிய ஸ்ரீ நவரத்தினம் பிள்ளை யாழ்ப்பாணக் கச்சேரியில் உத்தியோகம பார்த்து வருகின்றனர். முதலியாரின் மூதத மகள் பரஞான அம்மாளின் கணவராகும் ஸ்ரீ வே. மாணிக்கவாசகர் பிரக்ராசியாக (வக்கீல்) விளஙகுகிறார். இவர் மட்டுவில் வேற்பிள்ளை உபாத்தியாயரின் குமாரர்களிலொருவர். நம் முதலியார் அவர்கள் எழுதிவைத்திருக்கும புத்தகங்களை வெளியிட முயற்சி செய்யவேண்டியது இவர்களது பெருங்கடனும். திருவருள் துணை புரியவேண்டும். "முடியா முதலே என் கருத்து முடியும் வண்ண முன்னினறே".

[illegible]